# அவதாரமும் கிறித்தவமும்


**பேராசிரியர் முனைவர் யா. தா. பாசுகரதாசு**

M.A.(Tamil)., M.A.(Econ.)., M.Ed., M.Phil., Ph.D., Cert. in Sanskrit.






**தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனம்**

**508, 22 -ஆம் தெரு, பெரியார் நகர், கொரட்டூர், சென்னை - 600 080.**

அவதாரமும் கிறித்தவமும்

பேராசிரியர் முனைவர் யா. தா. பாசுகரதாசு



முதற்பதிப்பு 2008

தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனம்

508, 22 –ஆம் தெரு, பெரியார் நகர்,

கொரட்டூர், சென்னை – 600 080.

பேசி: +91-44-26248563

மின்னஞ்சல்: nilt.india@gmail.com

இணையதளம்: www.niltindia.org

அட்டை வடிவமைப்பு: மோரியா ஊழியங்கள்

இந்நூலினை வெளியிட உதவிய
இயேசுவின் குடும்ப ஊழியத்தாருக்கு
எங்கள் இதயம் நிறைந்த நன்றி!

**Jesus Family Ministry**
**951, West Side Ave, Jersey City, NJ 07306, USA.**

# அணிந்துரை

பேராசிரியர் முனைவர் யா.தா. பாசுகரதாசு அவர்கள் இந்திய மக்களிடையே சமய நம்பிக்கைகளாக நிலவிவரும் கருத்துகளைப் பன்னெடுங் காலமாக ஆராய்ச்சி செய்து வருபவர். 'அவதாரமும் அடியவர்களும்' என்னும் தலைப்பில் இவர் எழுதிய தொடராய்வுக் கட்டுரைகள் ஏறத்தாழ இருபத்து மூன்று தொடர்களாக வெளிவந்தன. 'சைவ சித்தாந்தத்தில் அவதாரக் கோட்பாடு உண்டா?' என்னும் இவரது ஆய்வுக் கட்டுரையைப் படித்த பன் மொழிப் புலவர் க. அப்பாத்துரையார், இவரைப் பேரறிஞர் என்றே பாராட்டி மகிழ்ந்தார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'ஆய்வியல் நிறைஞர்'ப் பட்டத்திற்காக 'அவதாரக் கோட்பாடு ஓர் ஒப்பாய்வு' என்னும் ஆய்வேட்டைப் படைத்துள்ளார்.

தற்போது 'அவதாரமும் கிறித்தவமும்' என்னும் இச் சிறுநூல் பொதுமக்கள் புரிந்துகொள்ளும் வகையில் எழுதப்பட்டது. இந்திய மக்களின் கருத்துமுறையையும் கிறித்தவக் கோட்பாட்டையும் ஒப்பிடு செய்து இவர் இந்நூலில் எளிமையாக விளக்கிக் காட்டியிருப்பது மிகவும் பாராட்டுதற்குரியது. அவதாரக் கோட்பாட்டின் இலக்கணங்களை வரையறுத்துக் கூறுவதாக இவரது நூல் அமைந்திருக்கிறது. இந்நூல் எல்லாருக்கும், சிறப்பாகக் கிறித்தவர்களுக்கும் நற்செய்தியாளர்களுக்கும் மிகப் பயனுடையதாக விளங்கும் என்பது என் நம்பிக்கை.

மேலும் 'தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவன'த்தின் வெளியீடாக இந்நூல் வெளிவருவது எமக்கெல்லாம் மிகுந்த மகிழ்ச்சியை அளிக்கிறது. இந்திய மக்களுக்கு இந்தியப் பின்னணியில் நற்செய்தி அறிவிப்பவர்க்குப் பயிற்சிக் களனாக இந்நிறுவனம் இயங்குகிறது. நூலாசிரியர் இந்நிறுவனத்தின் துணைத் தலைவராகவும் பாடத் திட்ட இயக்குநராகவும் செயலாற்றுகிறார். இறை பணிக்காக மேலும் நல்ல பல நூல்களை இயற்றித்தர இவருக்கு இறைவன் அருள்பாலித்திட அவதாரக் கடவுளைப் போற்றி வாழ்த்துகிறேன். இந்நிறுவனத்தின் தலைவர், செயலர் மற்றும் பொறுப்பாளர் அனைவர்க்கும் நன்றி! நூல் சிறப்பான உருவத்தோடு வெளிவர உதவிய திரு. சான் செயானந்தம், திரு. போசு பொன்ராசு அவர்கட்கும், 'இயேசுவின் குடும்ப ஊழியம்' போதகர் ஆசுவின் மைக்கேல் அவர்கட்கும் மிகுந்த நன்றியுடையேம்.

சென்னை
18.09.008

அ. சா. இராசசேகரன் (பொருளாளர்)
தேசியத் தலைமையாளர்
பயிற்சி நிறுவனம்

# ஆசிரியர் உரை

'அவதாரம்' என்றவுடன் பொதுவாக, அ∴து இந்து சமயத்திற்கு உரிமையானது எனப் பலரும் கருதுகின்றனர். அவ்வாறே 'ஊனுடம்பெடுத்தல் (Incarnation) என்றால் அது கிறித்தவத்திற்கு உரிமையானது என்றும் கருது கின்றனர். கடவுள் மனிதனாக இவ்வுலகிற்கு வந்தார் என்னும் வரலாற்று உண்மையை விளக்குவதற்காகப் புனை கதைகளும் புராணக் கதைகளும் பெரிதும் துணைபுரிந்துள்ளன.

வரலாற்றை விளக்கும் வண்ணம் புராணங்கள் எழுதப் படவில்லை என்றாலும் அவற்றில் அடிப்படை உண்மைகள் பொதிந்துள்ளன. எனினும் அவதாரத்தை விளக்கும் புராணக் கதைகள் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் வெவ்வேறு விதமாகப் புனையப்பட்டுள்ளன. அவதாரமாக வந்த கடவுளைச் சில புனைந்துரைகள் அசிங்கப்படுத்தியுள்ளதையும் காண்கிறோம். கடவுள் மனிதனாக இவ்வுலகில் பிறந்து வாழ்ந்தாலும் அவரிடம் கடவுட் பண்பும் மனிதப் பண்பும் நிறைவாகவே இருந்தன என்பதை விளக்கும் வண்ணம் இச்சிறுநூல் எழுதப்பட்டுள்ளது. எல்லாரும் புரிந்து கொள்ளும் வகையில் எளிமையாக எழுதப்பட வேண்டும் என்ற முயற்சியில் உருவானது இது. அதில் வெற்றி பெற்றிருக்கிறேனா என்பதை வாசகர்கள்தாம் சொல்ல வேண்டும்.

கிறித்தவத்தையும் அவதாரத்தையும் இணைத்தும் ஒப்பீடு செய்தும் காண்பது என்பது மிகப்பரந்துப்பட்டதொரு களம் ஆகும். அறிஞர் பெருமக்கள் பலர் இது குறித்து எழுதியுள்ளனர். அறிஞர்களுக்காக எழுதப்பட்ட எனது எழுத்துகள் இன்னும் நூல் வடிவம் பெறவில்லை. இறையருளும் பொருளுதவியும் கிட்டுமேல் அவையும் அச்சாகும்.

இச்சிறு நூலை வெறியிட முன்வந்த 'தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவன'த்தாருக்கு எனது உளங்கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன். இந் நிறுவனத் தலைவர், திரு. கா. ச. பாண்டித்துரை, செயளர் திரு. இர. சௌந்தர்ராசன், பொருளர் திரு. அ. சா. இராசசேகரன், பாடத்திட்ட ஒருங்கிணைப்பாளர் போதகர் சாரோன் தேவப்பிரசன்னம் ஆகியோருக்கும் நூல்வெளிவர உதவிய போதகர் ஆசுவின் மைக்கேல் அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றி. இந்நூல் உங்கள் கைகளில் தவழப் பல்லாற்றானும் துணைநின்ற இறையருளைப் போற்றி மகிழ்கின்றேன்.

தொலைபேசி +91-44-26245777
9444225454

முனைவர் யா.தா. பாசுகரதாசு
2, தமிழ்த் தெரு, சிவசக்தி நகர்
கொரட்டூர், சென்னை – 600 080.

# அவதாரமும் கிறித்தவமும்

## *எது அவதாரம்?*

'அவதார்' என்பது சமற்கிருதச் சொல். அவ+தார் அவதார்; 'அவ' என்பதற்குக் கீழே என்றும் 'தார்' என்பதற்கு இறங்கி வருதல் என்றும் பொருள். 'அவதார்' என்று கூட்டுச் சொல்லாகச் சேர்த்து எழுதும் போது 'கீழே இறங்கி வருதல்' என்று பொருள் படும். இதனோடு 'அம்' என்னும் விகுதி சேர்க்கப்பட்டு 'அவதாரம்' எனத் தமிழில் வழங்கப்படுகிறது.

இந்தியத் தொன்மங்களில் (புராணங்கள்) அவதாரம் என்பது இலக்கண நெறியை ஒட்டியதாக அமையாமல் மிகவும் சாதாரண முறையில் கதை போன்று விளக்கப்படுகிறது. சில இடங்களில் பொருத்தமற்றவையும் அறிவுக்கு ஒவ்வாதனவுமான புனை கதைகளும் அவதாரத்தோடு இணைத்துப் பேசப்படுகின்றன. இதனால் அவதாரம் என்பதன் உன்னதமான பொருளைச் சாதாரண மக்கள் கொச்சையாகக் கூடப் புரிந்து கொள்ளும் நிலைகளும் உள்ளன.

மிகவும் எளிமையாக விளக்க வேண்டுமானால் கடவுள் மனிதனாக இவ்வுலகில் பிறந்து வருவதே அவதாரமாகும்.

கடவுள் இந்நிலவுகில் மாந்தனைப் போன்று தோற்ற மளிப்பது அவதாரமாகாது. அவர் மாந்தனாகப் பிறந்துவருதல் வேண்டும். அந்தப்பிறப்பும் திவ்வியமான பிறப்பாக இருத்தல் வேண்டும். அது மாசு மறுவற்றதாக இருத்தல் வேண்டும் - என்றெல்லாம் மறை நூல்கள் விளக்கிக் கூறுகின்றன.

அவதாரம் என்பதை 'Incarnation' என்னும் ஆங்கிலச் சொல்லும் விளக்கிக் காட்டுகிறது. இச்சொல் இலத்தீன் மொழியிலிருந்து ஆங்கிலத்திற்குச் சென்றுள்ளது என்பர். இதனை 'ஊனுடம்பெடுத்தல்' எனத் தமிழ் மொழியில் குறிப்பிடலாம். தசையாக மாற்றங்கொள்ளுதல் என்றும் அகரமுதலிகள் சிலவற்றில் குறிக்கப்படுகின்றது.

இந்தியச் சமயங்களில் அவதாரம் என்னும் கருத்து மிகப்பரவலாகப் பேசப்படுகிறது. எனவே அவதாரம் என்பது இந்தியச் சமயங்களுக்கே உரியது என்று பலர் கருதுகின்றனர். அவ்வாறே 'ஊனுடம்பெடுத்தல்' என்பது கிறித்துவத்திற்கே உரியது என்று பலர் கருதுகின்றனர். மிக விரிவாக ஆராய்ந்து பார்க்கும் பொழுது, கீழே இறங்கி வருதல் என்னும் அவதாரமும், தசையாக மாற்றங் கொள்ளுதல் என்னும் ஊனுடம்பெடுத்தலும் - கடவுள் இவ்வுலகில் மாந்தனாகப் பிறந்து வந்ததனை விளக்க எழுந்தவை என்பது பொருத்தமுடையதாகும்.

### *அம்சாவதாரம்*

கடவுளின் அம்சத்தைப் பெற்றுப் பிறப்பெடுதல் அம்சாவதாரம் எனலாம். கடவுள் அம்சத்தின் ஒரு கூறுபாட்டினைப் பெற்று அவதாரமெடுத்தலை இது குறிப்பிடுகிறது என்பர். முனிவர், குருமார், அரும்பெரும் நெறிகளைத் தோற்றுவிப்போர் கடவுளின் அம்சத்தைப் பெற்றவர் என்று சிலர் விளக்கம் தருகின்றனர்.

இதனைச் சற்று ஆழமாகச் சிந்தித்துப் பார்க்கலாம். முனிவரும், சமயக் கணக்கரும், குருமாரும், பெருநெறிகளைத் தோற்றுவித்தோரும் இன்னபிற அருஞ்செயலாற்றுவோரும் ஆகிய ஒரு சிலர் மட்டும்தான் கடவுளின் அம்சத்தைப் பெற்றவரா? இவரைத் தவிர மற்றவரிடத்தில் கடவுளின் அம்சம் இல்லையா? என்றெல்லாம் நம் மனங்களில் கேள்விகள் எழலாம்.

மக்களினத்தைச் சீர்தூக்கிப் பார்க்கும் போது, எல்லாரும் ஓரினம்தானே? ஒரு வயிற்றில் தோன்றியவர்தாமே? மக்களினம் அனைத்தும் ஒரு மூல மனிதனிலிருந்துதானே தோன்றியிருக்க வேண்டும்? அந்த மூல மனிதன் எப்படித் தோன்றினான்? எங்கிருந்து தோன்றினான்? இதற்கு விடை தேடுகின்றபோது, சமய நம்பிக்கை

யும் அறிவியல் கண்ணோட்டமும் ஒத்துப்போகின்றன என்று கூறு வதற்கில்லை. அறிவியலாளர் அனைவருமே இதில் ஒத்த கருத்து டையவர் என்றும் கூறுதற்கில்லை!

சமய நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டு பார்க்கும் போது விவிலியத் திருமறையில் ஒரு விளக்கம் கொடுக்கப்படுகிறது. அத்திருமறையின் தொடக்க நூலில் முதலாம் மாந்தன் ஆதாமின் படைப்பு விளக்கப்பட்டுள்ளது. பேரண்டம் - இயலுலகம் - அவற்றி லுள்ளவை அனைத்தும் படைக்கப்பட்ட பின்பு ஆதாம் படைக் கப்பட்டான். 'அதாமா' என்பதிலிருந்து 'ஆதாம்' என்னும் பெயர் வந்ததென்பர். 'அதாமா' என்பதற்குச் செம்மண் என்பது பொருள் என்பர். எனவே ஆதாம் என்றால் மண்ணிலிருந்து உருவானவன் எனப் பொருள் கொள்ளலாம். மண்ணிலிருந்து படைத்த அவனது நாசியில் கடவுளே தமது மூச்சுக் காற்றை ஊதினார். அதனால் அவன் உயிர் பெற்றான். கடவுள் முதலாம் மனிதனைத் 'தமது சாயலாகவே' உருவாக்கினார்.

கடவுள் வெறுமையிலிருந்து எதையும் உருவாக்கவில்லை. கடவுளுக்குள்ளிருந்தே அனைத்தும் வெளிப்பட்டன. கடவுள் முற்றி லும் நிறைவானவர். வெளிச்சம் அவருக்குள்ளிருந்து வெளிப்பட்டது: ஆகாயம் அவருக்குள்ளிருந்து வெளிப்பட்டது: பஞ்சபூதங்கள் அனைத்தும் அவருக்குள்ளிருந்து வெளிப்பட்டன, ஊர்வன, பறப்பன, கடல் வாழ்வன, தாவரங்கள் முதலான அனைத்தும் அவரிடமிருந்தே தோன்றின. தாம் படைத்த உலகிலிருந்து மனி தனை உருவாக்கினார். மற்ற எல்லாவற்றையும் படைத்த வகை யினின்று மனிதனை மிக உன்னதமான வகையில் படைத்தார். அவனுக்குள் செலுத்தப்பட்ட உயிரும் ஆன்மாவும் கடவுளுடை யவை. கடவுள் அவன் நாசியில் ஊதினார்; அவன் உயிர் பெற்றான்.

அப்படியானால் முதலாம் மனிதன் கடவுளின் அம்சமானவன் அல்லவா? அவன் கடவுளின் அம்சமானவனே தவிர கடவுளுக்குச் சமமானவன் அல்லன். கடவுள் தமது ஆவியை அவனுக்குள் ஊதவில்லையென்றால் அவன் ஒன்றுமில்லையே! ஆகவே இந்த முதலாம் மனிதன் கடவுளின் அவதாரமா என்றால், 'இல்லை' என்பது பதிலாகும்.

கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள வேறுபாடு விண்ணுக்கும் மண்ணுக்கும் உள்ள வேறுபாடாகும். இந்த இடத்தில் ஒன்றை நினைவிற்கொள்ள வேண்டும். திருவிலியத்தின் புதிய ஏற்பாட்டுப் பகுதியில் பவுலடிகளார் கொரிந்து சபைக்கு எழுதும் முதலாம் திருமுகம் 15ஆம் அதிகாரத்தில் ஆதாம் என்னும் பெயரில் இரண்டு பேரைக் குறிப்பிடுகிறார். கடவுளால் படைக்கப்பட்ட ஆதாம் என்பவர் ஒருவர்; இந்த உலகத்தில் மாந்தனாக இறங்கி வந்த 'கடவுளாகிய ஆதாம்' என்பவர் மற்றவர். முந்தியவர் முதலாம் ஆதாம், பிந்தியவர் இரண்டாம் ஆதாம். இந்த இரண்டு பேரைத் தவிர வேறு எவருக்கும் ஆதாம் என்னும் பெயர் திருமறையில் கொடுக்கப்படவில்லை.

இயேசு பெருமானை இரண்டாம் ஆதாம் என்று குறிப்பிடுவதைவிட, 'இறுதி ஆதாம்' என்று குறிப்பிடுவதே திருமறையின் அடிப்படையில் மிகவும் பொருத்தமானதாகும். ஏனெனில் இவருக்குப் பிறகு வேறு ஓர் ஆதாம் என்பவர் குறிக்கப்பெறவில்லை.

முதலாம் ஆதாம் என்பவர் கடவுளால் கொடுக்கப்பட்ட உயிரைப் பெற்றுக் கொண்டவர். ஆனால் இறுதியாக வந்த ஆதாம் என்பவர் உலகோருக்கு உயிரளிப்பவர். மேற்குறித்த திருமறைப் பகுதியில்,

> *"முந்தின மனிதனாகிய ஆதாம் ஜீவாத்துமாவானான் என்றெழுதியிருக்கிறது: பிந்தின ஆதாம் உயிர்ப்பிக்கிற ஆவியானவர்" (I கொரிந்தியர் 15:45).*

மேலே குறிக்கப்பட்ட மொழியாக்கம் பழையது. 'ஜீவாத்துமா' என்பது சரியான பொருளைத் தருவதாயில்லை. எனவே அண்மையில் வெளிவந்த திருவிவிலியத்தின் பொது மொழிபெயர்ப்பை இங்குக் காணலாம். அது கீழே தரப்பெறுகிறது.

> *"நிலத்தின் மண்ணால் மனிதனை உருவாக்கி, அவன் நாசிகளில் உயிர் மூச்சை ஊத, மனிதன் உயிர் உள்ளவன் ஆனான்" (தொடக்கநூல் 2:7).*

மற்ற உயிரினங்களையெல்லாம் கடவுள் படைத்த போது, தம் சிந்தனையின் வெளிப்பாடாகிய வார்த்தையின் மூலமாகப்

படைத்துவிட்டார். ஆனால் முதலாம் மனிதனை உருவாக்கிய போது மட்டும் அவனுக்குள் தமது உயிர் மூச்சை ஊதினார். ஆகவே அவன் உயிர் உள்ளவன் ஆனான். அவன் கடவுளின் சாயலைப் பெற்றுக் கொண்டான். மற்றப் படைப்பின் உயிரினங்க ளுக்கு இல்லாத சிறப்பு இவ்வாறாக ஆதாமுக்குக் கிடைத்தது. மற்ற உயிரினங்கள் அனைத்தையும் ஆளுந்திறன் மாந்தனுக்கு அருளப்பட்டது. ஆந்த ஆளுமைத் திறன் கடவுளால் அருளப் பட்டது. மற்றப்படி, மாந்தனைவிட உருவத்திலும் உடல் வலிமை யிலும் பன்மடங்கு பெருமை உடைய விலங்கினங்களை மாந்த னால் எங்ஙனம் ஆட்டிப்படைக்க முடியும்?

எனவே கடவுளின் சாயலை ஒத்த முதல் மாந்தனைக் கடவு ளின் அம்சாவதாரம் என்று கூறாலாமா என்று சிந்தித்துப் பார்ப்பது நம்முன் எழுகின்ற ஒரு வினாவாகும். முதலாம் மனிதனாகிய ஆதாமையும் இரண்டாம் ஆதாமாகிய இயேசு கிறித்துவையும் இவ்விடத்தில் சீர்தூக்கிப் பார்ப்பது அவசியமாகிறது.

தசையும் குருதியும் எலும்பும் ஆகியவற்றால் படைக்கப்பட்ட. கடவுளின் சாயலான முதலாம் மனிதனைப் பாவம் பற்றிக் கொண் டதே! ஆனால் தசை, குருதி, எலும்பாகிய ஊனுடம்பேற்ற இயேசு கிறித்து இவ்வுலகில் பிறந்தது, ஆதாம் படைப்பிலிருந்து மாறுப் பட்டது. ஆதாம் பிறக்கவில்லை. அவன் படைக்கப்பட்டவன். ஆனால் இயேசு மனிதனாகப் பிறந்தார். ஒரு கன்னியின் வயிற்றில், மற்ற மனிதனைப் போன்று கருவாய் உருவாகிக் குழந்தையாய்ப் பிறந்தார். இயேசு கிறித்துவைப் பற்றித் திருவிவிலியம் குறிப்பிடும் போது ‘பெண்ணின் வித்தானவர்’ என்று குறிப்பிடுகிறது. கடவுளின் வித்து கன்னி மரியின் வயிற்றில் உருவானது. அதன்வழி உலகில் பிறந்தவரே அவதாரமாக வந்த கடவுளாகிய இயேசு கிறித்து.

ஆதாம் கடவுளின் படைப்பு. இயேசு கிறித்துவைப் போன்று மகவாய்ப் பிறவாதவன். பாவத்திற்கு உட்பட்டு வீழ்ந்து விட்டவன். இவனைப் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் ‘பிறவாயாக்கைப் பெரியோன்’ என்று குறிப்பிடுகின்றன. ஆனால் இயேசுவோ கடவு ளின் வித்தானவர். பாவமற்றவர். கடவுள் ஆதாமைப் படைத்த பொழுது உலகில் பாவமே இல்லை. அ∴தாவது, இப்பொழுது

உள்ள சூழ்நிலையில் எங்கும் பாவம் நிரம்பியுள்ளது. பாவம் செய்வதற்குண்டான சூழல் எங்கும் வெளிப்படையாக உலா வருகிறது. இன்றைய நிலை ஆதாம் படைக்கப்பட்ட பொழுது இல்லை. படைப்பின் ஒவ்வொரு நாள் இறுதியிலும், ஒவ்வொரு படைப்பையும் கடவுள் 'நல்லது' என்றே கண்டதாகத் திருமறை விளம்புகிறது.

ஆனால் இயேசு பெருமான் இவ்வுலகில் மாந்தனாய்த் தோன்றிய காலத்தில், உலகில் பாவ இருள் சூழ்ந்திருந்தது. எல்லாரும் பாவஞ் செய்து கடவுளின் மகிமையை இழந்தவர்களாய் இருந்தார்கள். அப்படிப்பட்ட சூழலில் பிறந்த இயேசுபிரான் பாவமற்றவராகவே தம் காலமெல்லாம் வாழ்ந்தார். பாவமே இல்லாத உலகில் தோன்றிய ஆதாம் பாவத்தில் வீழ்ந்தார்; ஆனால். பாவம் நிரம்பிய உலகில் பிறந்த இயேசு பாவமற்றவரானார். எனவே இந்த இரண்டு பேரில் எவர் கடவுளின அம்சமானவர்? இவ்விருவரில் எவரை அம்சாவதாரமாக ஏற்றுக் கொள்வது?

முதலாம் ஆதாம் பாவத்தில் வீழ்ந்தார். சாவு அவரை மேற்கொண்டது. ஆனால் இரண்டாம் ஆதாமாகிய இயேசுவோ பாவத்தையும் அதன் பலனாகிய சாவையும் மேற்கொண்டார். எனவே முதலாம் ஆதாம் அம்சாவதாரம் என ஏற்றுக் கொள்ளத் தக்கவன் அல்லன்; கடவுளின் அவதாரத்தைச் சாவு எங்ஙனம் மேற்கொள்ள முடியும்? இயேசு மனிதனாக அவதாரமாகப் பிறந்ததால் சாவுக்குட்பட்டார்; ஆனால் சாவு அவரது வாழ்வின் இறுதி அன்று. அவர் சாவினை வென்று உயிர்த் தெழுத்தார். இதனை அம்சாவதாரத்தின் இலக்கணமாகக் கொண்டால்தான் அவதாரம் என்றால் என்ன என்பதன் பொருள் விளங்கும்; இயேசு பெருமான் ஏன் இறுதி ஆதாம் எனக்குறிக்கப்படுகிறார் என்பதன் பொருளும் விளங்கும்.

புராணங்கள் சிலவற்றில் நம் கற்பனைக்கும் எட்டாத அவதாரக் கருத்துகள் பல விவரிக்கப்படுகின்றன. மாபாரதத்தில் நாராயணனின் கருப்பு மயிர் கண்ணனாகவும் வெள்ளை மயிர் பலராமனாகவும் அவதரித்ததாகக் குறிப்பிடப்படுகிறது. திருமாலின் படைக் கருவிகள் கூட உயிருள்ள மனிதர்களாக அவதரித்தன என்று குறிப்பிடப்பட்டுள்ளன.

"வளையொடு திகிரியும் வடைவ தீதர
விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும்
இளையவர் எனவடி பரவ வேகிநாம்
வளைமதில் அயோத்தியில் வருதும் என்றனன்"

என்னும் கம்பராமாயணப் பாடலில் (பாலகாண்டம், திருஅவதாரம், 22) திருமாலின் சக்கரம் பரதனாகவும், சங்கு சத்துருக்கனாகவும், ஆதிசேடன் இலக்குவனாகவும் அவதரித்ததாகக் குறிக்கப்படுகின்றன.

'அம்சம்' என்பது வேறு, 'அம்சாவதாரம்' என்பது வேறு. மாந்தனிடத்தில் கடவுளின் அம்சம் இருக்கிறது. கடவுளின் சாயல் அல்லது தோற்றம் மாந்தரிடத்தில் இருக்கிறது என்பதால் மாந்தரெல்லாரும் கடவுளராக மதிக்கப் பெறுவதில்லையே! மாந்தவியல்பு பாவ இயல்பு! பாவ இயல்பை இயற்கையாகப் பெற்றிருக்கின்ற, மனித இனத்தை மீட்டு, பாவமற்ற நிலையில் முதன்முதலில் படைக்கப்பட்ட மாந்தனின் இயல்பை மறுபடியும் கொணர்ந்து, அவன் இழந்த சாயலை மீண்டும் பெற வேண்டும் என்பதற்காகக் கடவுள் ஏற்றுக் கொண்டதுதான் 'அம்சாவதாரம்' ஆகும். எனவே அம்சாவதாரம் என்பது கடவுளுக்குரியதேயன்றி மனிதனுக்குரியதன்று என்பது தெற்றென விளங்கும்.

## இறங்குதலும் ஏறுதலும்

அவதாரக் கூறுபாட்டை நுணுகி ஆராய்கின்றபோது 'அவதாரம்' என்பது மிகத் தெளிவாக எதை உணர்த்துகிறது என்பதையும் அறிந்து கொள்ள வேண்டும். 'அவதாரம்' என்னும் சமற்கிருதச் சொல்லுக்குக் 'கீழே இறங்குதல்' என்பது நேரடியான பொருள். இறங்குதல் என்றாலே, மேலே இருந்துதான் கீழே இறங்கி வர முடியும். சமய நிலையில் இதனைப் பார்க்கும்போது, மேலுலகிலிருந்து மண்ணுலகிற்கு இறங்குதல் என்று விளக்கம் தரலாம். அஃதாவது, விண்ணுலகிலுள்ள கடவுள், மக்கள் வாழும் மண்ணுலகிற்கு இறங்குதலே அவதாரம் ஆகும்.

திருமூலர் பாடுகின்றபோதும்,

"விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு
தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து
உண்ணின் றுருக்கியொ ரொப்பிலா ஆனந்தக்
கண்ணின்று காட்டிக் களிப்பறுத் தானே"

- திருமந்திரம், முதல் தந்திரம், உபதேசம் 1.

எனப் போற்றுகிறார். பாவ வினையை ஈடுகட்டுவதற்காகக் கடவுள் ஊனுடம்பெடுத்து (மெய்கொண்டு), விண்ணுலகிலிருந்து இறங்கினார் (இழிந்து) என்று பாடுவது நோக்கற்பாலது.

கீழே இறங்குதல்தான் அவதாரமாகுமேயன்றிக் கீழேயிருந்து மேலே ஏறுதல் அவதாரமாகாது. 'அவதாரம்' என்னும் கூட்டுச்சொல் அதனைத்தான் உணர்த்துகிறது.

மனிதன் கடவுளாகலாமா? அஃதாவது, மனிதனால் கடவுளின் உன்னத நிலைக்கு உயர முடியுமா? மனிதனைக் கடவுளாகக் கோயில்கட்டி வழிபடுகிறார்களே! அரசர்களைக் கூடக் கடவுளாக வழிபட்டிருக்கிறார்கள். உரோமப் பேரரசர் சிலர் கடவுளாக மதிக் கப்பட்டிருக்கின்றனர். சிலர் அரசர், தம்மைக் கடவுளாக அறிவித்தும் இருக்கின்றனர். உரோமப் பேரரசிலும் சிரியா நாட்டிலும் அரசர் சிலர் அங்ஙனம் வழிபடப்பட்டிருப்பதை வரலாறு நமக்குக் காட்டு கிறது. அகஸ்டஸ் சீசருக்குத் தமிழகத்தில் கோயில் கட்டப் பட்டிருந்தது.

தமிழக முன்னாள் முதல்வர் எம்.சி. இராமச்சந்திரனுக்குத் தியாகராயநகரில் ஒரு சிற்றாலயம்! ஆந்திர மாநில முன்னாள் முதல்வர் என்.டி. இராமராவுக்கு அம்மாநிலத்தில் ஒரு கோயில்! திரைப்பட நடிகை குஷ்புவுக்கு ஒரு கோயில்....! கேரள மாநிலத்தில் நாராயண குருவுக்குத் திக்கெல்லாம் கோயில்! நம் முன்னோர் பலருக்கு நம் ஊர்களில் பல வழிபாட்டிடங்கள்! ஆண்டு தோறும் அவர்களுக்கு கொண்டாட்டங்கள்! திருவிழாக்கள்! இவையெல்லாம் எவற்றைக் குறிக்கின்றன? அல்லது எவற்றை வெளிப்படுத்திக் காட்டுகின்றன? கண்ணதாசன் பாடிய 'மனிதன் என்பவன்

தெய்வமாகலாம்! என்பதை ஓரளவு மெய்ப்பித்துக் காட்டு கின்றன. பலருக்குத் திரைப்பட நடிகரெல்லாம் 'இதய தெய்வங் கள்!' பலருக்கு அரசியல் தலைவர்கள் கண்கண்ட தெய்வங்களா கத் திகழ்கின்றனர். நடிகராகவும் அரசியல் தலைவராகவும் திகழும் ஒருவரை மரியன்னையோடு சமப்படுத்தி விளம்பரம் செய்ததால் ஏற்பட்ட விளைவுகள் எல்லாம் தமிழகத்துக்குத் தெரியும்! மனிதன் தனது ஆர்வத்தையும் நன்றியுணர்வையும் இவ்வாறெல்லாம் வெளிப் படுத்துகிறான்.

இவர்களெல்லாம் மனிதக்கடவுளர்கள் (man-gods)! இன்று இவர்கள் என்ன ஆனார்கள்? அல்லது நாளை என்ன ஆவார்கள்? கடந்த காலங்களில் இறந்து போனவர்கள் கல்லறைக்குள் உறங்கு கிறார்கள். இன்று வாழ்ந்து வணங்கப்பெறுபவர்கள் எதிர்காலத்தில் அதே நிலையைப் பெறுவார்கள். இதுதான் உலகின் இயற்கை!

உரோமப் பேரரசில் 'கடவுளாய்' வணங்கப் பெறுபவர் இங்கி லாந்திலோ அமெரிக்காவிலோ வணங்கப் பெறுவது இல்லை! தமிழகத்தில் வணங்கப் பெறுபவர் வடமாநிலத்தில் வணங்கப் பெறுவதில்லை! இனக் கடவுளர், குழுக்கடவுளர், தலைமைக் கடவுளர்.... என்றிவ்வாறு பலப்பல வழிகளில் இவர்களை வகைப் படுத்தலாமே ஒழிய, அவர்களைக் 'கடவுள்' என்னும் இலக்கண வரையறைக்குள் கொணர இயலாது.

புராணங்களிலும் இதிகாசங்களிலும் உள்ள தெய்வங்களை வகைப்படுத்திப் பார்க்கும்போது 'ஏறியவர்' யார்யார், இறங்கியவர் யார்யார் என்பது நன்கு தெளிவாகும். ஏறியவராகப் பலரைக் குறிப்பிடலாம். இறங்கியவராகப் பலரைக் குறிக்கமுடியாது. ஒரு வரைத்தான் குறிக்க முடியும். அவரே அவதாரம்.

'இறங்குதல்' என்பது மட்டும்தான் அவதாரத்தின் கூறுபாடா?

'ஏறுதல்' என்பது அவதாரம் அன்று என்று கண்டோம்.

விண்ணிலிருந்து இறங்கிய அவதாரமாகிய கடவுள் இம்மண் ணிலே இருந்து மறைந்து விட்டாரா? வேறு வகையில் கூற வேண்டுமானால், கடவுள் மனிதனாக உலகில் பிறந்தார் என்றால், பிறப்பவர் எவரும் இறக்க வேண்டும் என்பதுதானே உலக நெறி?

அவதாரமாகக் கருதப்படும் கண்ணன், வேடனுடைய அம்பால் இறந்து போனான். மாவீரனாகிய இராமன் ஆற்றில் இறங்கி மாண்டு போனான். அவ்வாறே இயேசுவும் சிலுவையில் அறையுண்டு பலி யானார். பாரதியார் இவற்றை,

"சிலுவையில் அறையுண்டு யேசு செத்தான்;
தீயதொரு கணையாலே கண்ணன் மாண்டான்;
பலர்புகழு மிராமனுமே யாற்றில் வீழ்ந்தான்"

- பாரதி அறுபது 6:12

என்று பாடுகிறார். ஆனால் கண்ணனுக்கும் இராமனுக்கும் கிட்டாத ஒரு செயலை இயேசுவுக்குக் குறித்துக் காட்டுகிறார் பாரதியார்.

"ஈசன் வந்து சிலுவையில் மாண்டான்;
எழுந்து யிர்த்தனன் நாளொரு மூன்றில்;
நேச மாமரி யாமத்த லேனா நேரிலே
இந்தச் செய்தியைக் கண்டாள்"

- பாரதி வேதாந்தப் பாடல்கள், 9:1

சிலுவையில் மாண்ட இயேசு மூன்றாம் நாள் உயிர்பெற்றெழுந் தார் என்பதே அச்செயல். 'சாவின்மேல் வெற்றி' என்பது அவதாரங் களாகக் குறிக்கப்படும் வேறு எவருக்கும் சுட்டப்படாமல் இயேசு கிறித்துவுக்கு மட்டும் சுட்டிக் கூறப்படுவது தனிச் சிறப்பாகும்.

அவதாரமாக வந்த கடவுள் இறந்து போவது என்பது உலகி யல் இயற்கை நெறி என்பதை ஒப்புக் கொள்ளலாம். ஆனால் அந்த இறப்பு இறுதியானது என ஏற்றுக் கொள்ளுவது பொருத்த மாக இல்லை. ஏனென்றால், மனிதனும் பிறக்கிறான், கடவுளும் பிறக்கிறார். மனிதனும் இறக்கிறான் கடவுளும் இறக்கிறார் என்பது போன்று பொதுப்படையாகக் கூறுவது மனிதனையும் கடவுளையும் பிரித்தறிவது ஆகாது.

மனிதன் பிறப்பதைப் போன்று அவதாரமாகிய கடவுள் பிறக்க வில்லை! கடவுளின் பிறப்பு மனிதப் பிறப்பினின்றும் மாறுபட்டது. இது குறித்துப் பின்னர் சிந்திக்கலாம். அவ்வாறே, மனிதன் இறப் பதைப் போன்று கடவுள் இறக்கவில்லை. அஃதாவது, மனிதன்

இறந்து மண்ணோடு மண்ணாய்ப் போய் விடுகிறான். அவதாரக் கடவுள் இறந்தாலும், இறப்பின்மேல் வெற்றி பெற்று வாகை சூடுகிறார்.

மனிதனின் பிறப்பிடம் இம்மண்ணுலகு. எனவே, அவன் இறந்த மண்ணுலகுக்கே திரும்புகிறான். கடவுளின் இருப்பிடம் விண்ணுலகு. அவர் அவதாரம் எடுத்து பிறந்ததனால் மண்ணுலகுக்கு வருகிறார். அவர் இறப்பதும் மண்ணுலகுதான். ஆனால் மறுபடியும் அவர் தம் இருப்பிடமாகிய விண்ணுலகுக்குச் செல்கிறார். இதனை விளக்கிக் காட்டுவதாகக் கிறித்தவ அவதாரம் திகழ்கிறது.

கடவுள் அவதாரம் செய்ததனால், இயேசு என்னும் பெயரில் இம் மண்ணுலகில் பிறந்தார். மாந்தனாகப் பிறந்ததனால் இம் மண்ணுலகினில் அவர் இறந்தார். அவர் மனிதனைப் போல இறந்தாலும், சாவு அவருக்கு இறுதியாக இல்லாமல் மூன்றாம் நாளில் சாவை வென்று உயிர் பெற்றெழுந்தார். இந்த நிகழ்ச்சி தான் மாந்தனையும் அவதாரத்தையும் பிரித்துக் காட்டுகிறது. உயிர் பெற்றெழுந்த பின்னர் இயேசு கிறித்து மறுபடியும் விண்ணு லகு சென்றுவிட்டார் என்று கிறித்தவ மறைநூல் விளக்கிக் காட்டுகிறது. அவர் எந்த இடத்திலிருந்து இறங்கினாரோ அதே இடத்திற்கு ஏறிச் சென்றார்.

அவதாரமாகப் போற்றப்படுகின்ற இராமன், கண்ணன் போன்ற அத்தனை பேரும் மண்ணுலகில் பிறந்தவராகக் காட்டப்படுவது போன்று, இறுதியில் இம்மண்ணுலகில் இறந்துபட்டவராகவே குறிக் கப்படுகின்றனர். இறப்புதான் அவதாரங்களாகிய இவர்களின் முடிவு! ஆனால் இயேசு கிறித்து சாவை வென்று மறுபடியும் விண்ணுல குக்கு ஏறிச் சென்றார்.

இதனைப் புதிய ஏற்பாட்டுத் திருமறை நூல்கள் தெளிவு படுத்துகின்றன.

*"ஆண்டவர் இயேசு விண்ணேற்படைந்து*
*கடவுளின் வலப்பக்கத்தில் அமர்ந்தார்" - மாற்கு 16:19*
*"அவர்களை விட்டுப் பிரிந்து வானத்துக்கு*
*எடுத்துக் கொள்ளப் பட்டார்" - லூக்கா 24:51*

*"அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கையில்*
*உயர எடுத்துக் கொள்ளப்பட்டார்."*

*- திருத்தூதர் பணிகள் 1:9*

மேற்குறித்த பகுதிகளின் வாயிலாக இயேசு பெருமானின் விண்ணேற்றம் பற்றிய செய்தியை அறிய இயலுகிறது. இந்தக் கூறுபாட்டினை நாம் 'ஏறுதல்' (ascension) என்று குறிப்பிடலாம். மற்றப்படி, மனிதனாகப் பிறந்த ஒருவரைக் கடவுளாக உயர்த்திக் காட்டுவது பொருத்தமுடையதாகாது. எனவே, இறங்குதல், ஏறுதல் ஆகிய இரட்டைக் கூறுபாடுகளைக் கொண்டதுதான் 'அவதாரம்' என்னும் கோட்பாட்டின் இலக்கணம் என்பது விளங்கும்.

## தூய உடம்பினன் ஆதல்

அவதாரக் கடவுளின் பிறப்பு தூய பிறப்பு. மாந்தர் எவருடைய பிறப்பும் தூய பிறப்பு அன்று. செம்பினில் இயல்பாகவே களிம்பு சேருவதைப் போல, மாந்தன் ஒவ்வொருவனுடைய பிறப்பிலும் கருவிலேயே பாவம் சேர்ந்து விடுகிறது. இதற்குத்தான் 'கருமாசு' என்று பொருள். ஆனால் பிறப்பிறகுட்படும் கடவுளுக்கு இக்கருமாசு கிடையாது என மறைநூல்கள் விவரிக்கின்றன.

கடவுளின் அவதாரமாகச் சொல்லப்படும் புராண மாந்தர் எவராவது கருமாசின்றிப் பிறந்திருக்கிறார்களா என்பதைச் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். இவரெல்லாரும் உலக மாந்தருக்குப் பிறந்தவரா கவே குறிக்கப்படுகின்றனர். அவ்வாறாயின் கருமாசின்றிப் பிறந்த அவதார மாந்தர் எவருமிலர்.

கடவுளின் அவதாரம் பற்றிக் கூறும் சைவ சித்தாந்தம் - 'தூய உடம்பின் ஆதல்', 'இயல்பாகவே பாவங்களிலிருந்து நீங்கு தல்' என்னும் இரண்டு இலக்கணங்களைக் குறிப்பிடுகிறது. கடவுள் மாந்தனாகப் பிறந்தால் இவை இரண்டு கூறுகளும் பொருந்தப் பெறுவது இயற்கையானவை. இல்லையெனில் இக்கூறுகளும் அவர்க்குப் பொருந்தா. அப்படியானால் இவை இரண்டு பண்புகளும் இல்லாதவர் அவதாரமல்லர் என்ற தெளிவினைப் பெற வேண்டும். கணவன் - மனைவி ஆகியோரின் சேர்க்கையால் பிறக்கும் மாந்தர்

எவரும் கருமாசுடன் பிறப்பது என்பதுதான் இயற்கை. அவ்வாறு பிறந்தவரை அவதாரமாகக் காட்டினால் அ்து உண்மையன்று என்பது விளங்கும்.

கீதை இதனைத் 'திவ்வியம் ஜன்மா' என்று குறிப்பிடுகிறது. திவ்வியமான பிறப்பு என்பது கடவுளின் பிறப்பைக் குறிக்குமே தவிர, மாந்தரின் பிறப்பினைக் குறிக்காது என்பது தெளிவு.

இயேசுவின் பிறப்பினைத் 'திவ்வியம் ஜன்மா' என்று குறிப்பிட வேண்டும். அவர் உலக மாந்தருக்குப் பிறவாதவர். அவர் கன்னி மரியாளின் வயிற்றில் கடவுளின் ஆவியானவரால் கருவுயிர்த்தவர். இது குறித்து திருமறையில் லூக்கா நற்செய்தி நூல் தெளிவுபடுத்து கிறது. வான தூதர் மரியாளிடம் தோன்றி, 'இதோ கருவுற்று ஒரு மகனைப் பெறுவீர், அவருக்கு இயேசு என்னும் பெயரிடுவீர் (லூக்கா 1:31) என்று கூறிய போது மரியாள் அவரை நோக்கி, இது எப்படி நிகழும்? நான் கன்னியாயிற்றே!" என்றார். அதற்கு வான தூதர்,

> *"தூய ஆவி உம்மீது வரும். உன்னத கடவுளின் வல்லமை உம்மேல் நிழலிடும். ஆதலால் உம்மிடம் பிறக்கப் போகும் குழந்தை தூயது. அக்குழந்தை இறை மகன் எனப்படும்"*
>
> *- லூக்கா 1:35*

என்று கூறிய பகுதிகள், இயேசுவின் பிறப்பு 'திவ்வியம் ஜன்மா' என்பதை உறுதிப்படுத்தும். மரியாளுக்கு நியமிக்கப்பட்ட கணவராகிய யோசேப்பு, இயேசுவின் வளர்ப்புத் தந்தை ஆவார். எனவே, இயேசுவுக்குக் கருமாசு என்பது கிடையாது. தூய உடம் பினன் ஆதல், இயல்பாகவே பாவங்களிலிருந்து நீங்குதல்' — எனக் குறிக்கப்பெறும் சைவ சித்தாந்த இலக்கணக் கூறுகள் இயேசு கிறித்துவுக்கு மட்டுமே பொருந்தி வருகின்றன.

## இயற்கைக்கு மாறுபட்ட நிகழ்வு

வரலாற்று நிகழ்வுகள் சிலவற்றுக்கு நம்மால் விளக்கம் கொடுக்க இயலவில்லை. அங்ஙனமே அறிவியலும் விளக்கம் தருவதில்லை. கடவுளோடு தொடர்புடைய பல நிகழ்ச்சிகள் இவ்

வாறு விளங்குவதைக் காணலாம். கடவுள் இருக்கிறாரா, இல்லையா என்று கேள்விகள் எழுப்பப்படுவதற்கும் இதுவும் ஒரு காரணமாகும். அவற்றை அதிசயங்கள் என்றும் அற்புதங்கள் என்றும் நாம் பெயர் சூட்டுகிறோம். இவ்வாறு நடைபெறும் நிகழ்ச்சிகளை இயற் கையிறந்த நிகழ்வுகள் என்று நாம் குறிப்பிடலாம்.

அவதாரம் என்பதும் இயற்கையிறந்த நிகழ்வுதான்! விண்ணுல கிலுள்ள கடவுள் மாந்தனாகப் பிறப்பதற்கு மண்ணுலகிலுள்ள மாந்தர் ஒருவரின் துணை தேவையாகிறது. சிவபெருமானால் உருவாகிய கருவை, சப்தரிசிகளின் மனைவியர் தம் வயிற்றில் சுமந்தனர் என்று புராணங்கள் தெரிவிக்கின்றன. அறுவர் பெற் றெடுத்த பிள்ளைகளை ஆறு முகங்களும் ஒருடலுமாக உருமாற்றி, குமரக்கடவுளாகிய அவதாரக் கடவுளை அப்புராணங்கள் போற்று கின்றன. புராணங்கள் விளக்குகின்ற இந்நிகழ்ச்சிகள் எல்லாம் இயற்கையிறந்த நிகழ்ச்சிகள்.

அது போலவே பிள்ளையாரின் தத்துவ விளக்கக் கதைகளும் அமைந்துள்ளன. உமையம்மையின் உடலினின்று உருட்டித் திரட்டி உருவாக்கப் பெற்றவரே பிள்ளையார். பிள்ளையாரின் தலை வெட்டப்பட்டு, யானைத் தலை ஒட்டப்பட்டுப் பிள்ளையார் உரு வானதும் இயற்கையிறந்த நிகழ்ச்சிதான்.

புராணங்களில் சித்திரிக்கப்படுகின்ற நிகழ்ச்சிகள் உவமைக் கதைகளாகத் திகழ்கின்றன. சில புராண நிகழ்ச்சிகளுக்கு வரலாற் றுப் பின்புலம் அமைந்துள்ளது. எல்லாவற்றுக்கும் அல்ல!

இயேசு பெருமானின் அவதாரம் இயற்கையிறந்த நிகழ்ச்சியா கும். அது வரலாற்று நிகழ்ச்சியாகும். புராணம் அன்று. இயேசு பெருமானின் தாயார் மரியாள் இவ்வுல மாந்தருள் ஒருவராகத் திகழ்ந்தவர். அவர் யோசேப்பு என்பாருக்கு மணப்பெண்ணாக நிச்சயிக்கப்பட்டவர். ஆனால் அவர்கள் கூடிவரும் முன்னரே தூய ஆவியானவரால் கருவுற்றார். (மத்தேயு 1:18). காபிரியேல் என்னும் இறைத்தூதர் மரியாளிடம் அனுப்பப்பட்டு, 'நீர் ஒரு குமாரனைப் பெற்றெடுப்பீர்' என்று அறிவிக்கப்பட்ட உடனே, 'இது எப்படி ஆகும்? எனக்குக் கணவர் இல்லையே! (லூக்கா 1:34) என்று பதிலளித்தார். ஆனால், கடவுளின தூதர், 'தூய ஆவியாரின்

ஆவி உம்மீது இறங்கும், அவரது வல்லமை உம்மீது நிழலிடும். உம்மிடம் பிறக்கப் போகும் பிள்ளை இறைமகன் என அழைக்கப் படும்' (லூக்கா 1:35) என்று அறிவித்தார். இது மிகப்பெரும் இயற்கையிறந்த நிகழ்ச்சியாகும்.

கடவுளுக்கும் மாந்தவினத்திற்கும் நேர்ந்த தொடர்புதான் அவதாரமாகக் கிறித்தவத் திருமறையில் குறிக்கப்பட்டுள்ளது. இது வெறும் புராண நிகழ்ச்சி அன்று; மாறாக இயேசுவின் பிறப்பு இயற்கையிறந்த வரலாற்று நிகழ்ச்சி ஆகும்.

புராணங்களில் அவதார மனிதராகக் குறிக்கப்படும் ஒவ்வொரு வருடைய பிறப்பையும் உற்று நோக்கும் போது, அவர்களின் தந்தையர் மாந்தர்களாகவே குறிக்கப்படுகின்றனர். மாந்தன் ஒருவனுக்குப் பிறந்தவன் மாந்தனாக முடியுமே தவிர, கடவுளாக முடியாது.

அதேபோல், அவதார மாந்தரின் இறப்பைச் சீர்தூக்கிப் பார்க் கும்போதும் உண்மையான அவதாரம் யார் என்பதையும் பகுத்தறி வின் மூலமும் வரலாற்றின் மூலமும் அறிந்து கொள்ளலாம். உலகில் பிறக்கும் மாந்தர் எவருமே இறந்து போகிறார். மனிதராகப் பிறந்த கடவுளும் இவ்விதிக்கு உட்படுகிறார். ஆனால் இறப்பு என்பது கடவுளுக்கு இறுதி நிகழ்வன்று. இயேசுவைப் பொறுத்த வரை, அவர் மீண்டும் உயிர் பெற்றெழுந்தார். அதன் பின்னர் இவ்வுலகினின்றும் விண்ணேற்றமடைந்து வானுலகு அடைந்தார். அவரது உடல் இவ்வுலகில் மற்ற மாந்தரைப் போன்று அழிந்துவிட வில்லை! இந்த நிகழ்வும் இயற்கையிறந்ததொரு நிகழ்வாகும்.

விண்ணிலிருந்து மண்ணுலகிற்கு இறங்கி வந்த கடவுள் இவ் வுலகில் இறந்து, மறுபடியும் சாவை வென்று விண்ணுலகடைந்தார் என்பது ஒரு நிறைவான வட்டத்தை வெளிப்படுத்துகிறது. இதை விடுத்து, மண்ணுலகில் பிறந்த ஒருவரை வானுலகுக்கு உயர்த்தி, கடவுளாகக் காட்டுவது அவதாரத்திற்குப் பொருத்தமாயில்லை!

## *வரலாறும் அவதாரமும்*

அவதாரம் என்பதை நினைத்தவுடனே புராணங்கள்தாம் முத லில் நம் கண்முன்னே தெரிகின்றன. அவதாரத்தை விளக்குவதற்

காக இந்தியாவில் தோன்றிய புராணக் கதைகள் ஏராளம்! ஏராளம்!! இந்தக் கதைகளெல்லாம் உண்மையில் வரலாற்றில் நிகழ்ந்தவை தாமா? இந்தக் கதைகளை நாம் வாசிக்கும்போது நாம் மலைத்துப் போகிறோம்! பல சமயங்களில் அவை கட்டுக்கதைகள் என்று விட்டுவிடுகிறோம். கதை, நாடகம் எழுதுகின்றவர்களுக்கும் திரைப் படம் முதலியவற்றை உருவாக்குகிறவர்களுக்கும் இவை அவர் களின் கற்பனை வளத்திற்குப் பெருந்தீனியாக அமைந்துவிடுகின் றன. புராணங்கதைகளை எந்த வடிவில் அனுபவித்தாலும் அவை மிகுந்த உள்ளக் கிளர்ச்சியை ஏற்படுத்துவதைக் கண்கூடாகக் காணுகிறோம்.

புராணங்களுக்கும் வரலாற்றுக்கும் மிகுந்த வேறுபாடு உள் ளதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். வரலாறு என்பது உண்மை யில் நடந்த நிகழ்ச்சி அல்லது நிகழ்ச்சிகளின் தொகுப்பு. புராணம் என்பது வரலாற்றை அடியொற்றியோ கற்பனையான புனைந்துரை களாகவோ அமையும் கதைகள். புராணங்களை எவரும் வரலாறு என்று ஏற்றுக்கொள்வதில்லை.

அவதாரக் கதைகளைப் பொறுத்தமட்டில் இந்தியக் கருத்து மரபு முறையில் அவை புராணங்களாகவே திகழ்கின்றன. நமக்குக் கிடைத்துள்ள தரவுகளைச் சீர்தூக்கிப் பார்க்கும் போது, அவற்றுக் கும் வரலாற்றுக்கும் தொடர்பில்லை. வரலாற்றோடு தொடர்புடைய வராகச் சுட்டப்படும் காவிய கால வீரர் கடவுளர் அல்லர். அவர் மக்களுள் சிறந்தோர் என்பதாகக் கொள்ளலாம்.

இந்தியாவில் உருவான அவதாரங்கள் எல்லாரும் உலகப் பெற்றோருக்குப் பிறந்தவர். அவர்களது பிறப்பில் கடவுளின் தொடர்பு ஏதுமில்லை. பிற மக்களைப்போன்று குறையுடையவர்கள். இந்த அவதார மாந்தர் அனைவரும் இறுதியில் இறந்துபட்டனர். அதோடு அவர்களின் காலமும் முடிந்துவிட்டது. அவர்கள் எப்போது பிறந்தனர் என்பதற்கும் வரலாறில்லை! எப்போது இறந்தனர் என் பதற்கும் வரலாறில்லை! கடவுள் இவ்வுலகில் மனிதனாகப் பிறந் தார்; மனிதராக வாழ்ந்தார். மனிதரைப்போல, மாண்டு போனார் என்றால் மனிதரைக் கடவுளிலிருந்து பிரித்துக் காட்டுவது எது? 'இவர் மனிதராக வந்த கடவுள் என்று கூறுவதற்குரிய, மனிதரை

விட மீக்கூர்ந்த அம்சம் எது? இராமன், கண்ணன், பரசுராமன் முதலான, அவதார மாந்தரையெல்லாம் இந்தப் பின்னணியில் காண வேண்டும்.

இயேசு என்னும் அவதாரக் கடவுளையும் இதனடிப்படையில் சீர்தூக்கிப் பார்க்கலாம். இயேசுவின் பிறப்பு ஒரு வரலாற்று நிகழ்ச்சி ஆகும். உலக வரலாற்றைக் கி. மு., கி. பி., என்று அறிஞர் பகுத்துக் காட்டியுள்ளனர். உலக வரலாற்றின் மையமாக, நடுநாயமாக இயேசு வரலாற்றில் குறிப்பிடப்படுகிறார். இவரது பிறப்பின் வரலாறு மத்தேயு, லூக்கா முதலிய நற்செய்தி நூல் களில் குறிப்பிடப்படுகிறது. மத்தேயு நற்செய்தி நூலில் தொடக் கத்தில் ஆபிரகாம் தொடங்கி இயேசு கிறித்து வரையிலான பிறப்பின் அட்டவணை கொடுக்கப்பட்டுள்ளது. அதோடு யோசேப்பு என்பவர் இயேசுவின் வளர்ப்புத் தந்தையே தவிர அவரைப் பெற்றெடுத்த தந்தை அல்லர் என்ற செய்தியும், இயேசு தூய ஆவியாரால் மரியாளின் வயிற்றில் உருவானவர் என்னும் செய்தி யும் குறிக்கப்பட்டுள்ளன. லூக்கா 3:23 முதல் 38 வரை இயேசுவின் முன்னோர் அட்டவணை கொடுக்கப்பட்டுள்ளது. அதில் முதலாம் மனிதன் ஆதாமின் வழிவந்தவர் இயேசு என்றும் செய்தி குறிக் கப்படுகிறது.

இயேசு கிறித்துவின் வரலாறு, மற்ற வரலாற்றிசிரியரால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. பெரிய ஏரோது கி.மு. 4 ஆம் ஆண்டு இறந்த காலக்கட்டத்தில் இயேசு பிறந்துள்ளார். ஏரோது இறப்பதற்கு இரண்டாண்டுகளுக்கு முன்னர் அதாவது, கி.மு. 6 அல்லது 7 இல் இயேசு பிறந்திருக்கவேண்டும் என்று வரலாற்றாசிரியர் குறிப்பிடுகின்றனர். அகஸ்டஸ் சீசரின் காலத்தில் மக்கள் தொகை கணக்கெடுப்பதற்கு ஆணை பிறப்பித்தபோது, குழந்தை இயேசு பெத்லகேம் ஊருக்குப் பெற்றொரால் கொண்டு செல்லப்பட்டார். திபேரியு சீசர், உரோம ஆளுநர் பொந்திப்பிலாந்து, பிலிப்பு, ஏரோது முதலிய ஆட்சியாளர் காலத்தில் இயேசுவும் வாழ்ந்தார் என்று லூக்கா 3:1 இன் வழி அறிகிறோம்.

எனவே, இயேசு பெருமான், வரலாற்றில் வந்த அவதாரம் என்பது உறுதி செய்யப்பட்ட உண்மையாகும். அவதாரம் என்பது

ஒரு மாயத் தோற்றம் அன்று; ஒரு முறையோ பல முறையோ காட்சியளித்துவிட்டு மறைந்து விடுவது அவதாரம் அன்று. ஒரு மாந்தனைப் போன்று கடவுளும் இவ்வுலகிற் பிறந்து, வாழ்ந்து, இறந்து போவது அவதாரமாக வந்த கடவுளுக்கும் பொருந்தும். ஆனால் மாந்தரைப் போன்று இறந்து போவது அவதாரக் கடவுளுக்கு இறுதியானதன்று.

இறப்பின் மீது வெற்றி பெற்றவர் இயேசு. சிலுவையில் பலி யான இயேசுவின் உடல் அரிமத்தியா ஊரானாகிய யோசேப்பின் கல்லறையில் அடக்கம் செய்யப்பட்டது (மத்தேயு 27:57-60). ஆனால் சாவினை வென்று அவர் மூன்றாம் நாளில் உயிர்த் தெழுந்தார்.

மனிதர் ஒருவரை அவதாரமாகக் காட்டினால், அவருடைய சாவுதான் அவரது வாழ்வின் இறுதி நிகழ்வு. கடவுளே இவ்வுலகில் அவதாரமாக வந்தார்; அவர் இறந்தார். ஆனால் மறுபடி உயிர் பெற்றெழுந்தார் எனக் குறிப்பிடும்போது அவரது கடவுட்தன்மை தெளிவாக வெளிப்படுகிறது. அவதாரமாக வந்த கடவுளையும் அவதாரமாகக் காட்டப்பெறும் மனிதனையும் பிரித்துக் காட்டும் சிறப்பானதொரு கூறுபாடு இதுவாகும். ஏனெனில், மனிதனாக வந்த கடவுளுக்குச் சாவு என்பது இறுதி நிகழ்வாக இருக்க முடியாது.

## பலி நிறைவேற்றமே அவதாரத்தின் நோக்கம்

மேலோட்டமாகப் பார்க்கும்போது, உலகில் மனிதனாகப் பிறந்த எவருமே என்றாவது ஒரு நாள் இறந்து போவார் என்பது பொது வான நியதியாக விளங்குகிறது. அவர் இறப்பதற்கும் ஏதாவது ஒரு காரணம் இருக்கும் - நோயுற்றோ, முதிர் வயதாகியோ, விபத்தில் சிக்கியோ, கொலையுண்டோ...ஏதோ ஒன்றின் காரணமாக இறந்துபடலாம்.

மனிதனும் இறக்கிறான்; மனிதனாக வந்த கடவுளும் இறக் கிறார்...! அவதாரக் கடவுள் ஏன் இறக்கிறார்? எப்படி இறக்கிறார்? இந்த வினாக்களை, 'அவதாரம்' என்று குறிப்பிடும் ஒவ்வொரு வருக்கும் உரித்தாக்கி விடை காணவேண்டும்.

இந்தியப் புராணக் கதைகளில் கண்ணனின் செயல்களும் இராமனின் செயல்களும் மிகவும் விரிவாகப் பேசப்படுகின்றன. மாபாரதம், அரிவம்சம், இராமாயணம் போன்ற இதிகாசங்களும் புராணங்களும் கண்ணனின் லீலைகளையும் இராமனின் வீரதீரச் செயல்களையும் மிக விரிவாகப் பேசுகின்றன.

மதுரா, குருசேத்திரம், பிருந்தாவனம், துவாரகை, யமுனை யாற்றை ஒட்டிய பகுதிகள் போல்வன கண்ணனோடு தொடர்புடைய இடங்களாக முன் குறித்த நூல்களில் குறிக்கப்படுகின்றன. மாபார தத்தில் கண்ணன் நிகழ்த்திய வியப்பான வீரச் செயல்களும் ஆயர்பாடியில் கண்ணனின் குறும்புச் செயல்களும் யமுனை யாற்றங்கரைப் பகுதிகளில் கோபியரோடு கொஞ்சிக் களித்த 'ரசலீலை'களும் தொன்ம நூலாசிரியர் பலரையும் ஆழ்வார் போன் றோரையும் மிக விரிவாகக் கவர்ந்தவை ஆகும். ஆனால் கண்ண னின் இறுதிக் காலம் மிகவும் துன்பியல் நிகழ்வுகள் பல நிரம்பிய னவாக விளங்குகின்றன. கண்ணனின் சக்கரப்படை விண்ணில் எடுத்துக்கொள்ளப்பட்டது; குதிரைகள் அவன் தேரினை, விண்ணில் எழுந்து கடலுக்கு மேலே இழுத்துச் சென்றபோது அவை மறைந்து விட்டன. பலராமனின் கொடியிலிருந்த பனைச்சின்னமும் கண்ண னின் கொடியிலிருந்த கருடச் சின்னமும் கொடிகளைவிட்டுப் பிரிந்து மறைந்துவிட்டன; பலராமன் இறந்துபட்டான்; கண்ணனின் பெயரனும் பிற மக்களும் உறவினரும் மடிந்து விட்டனர். யாதவர் ஒருவரையொருவர் வெட்டி வீழ்ந்துபட்டனர். இவற்றால் சொல்லொ ணாக் கலக்கத்தில் ஆழ்ந்த கண்ணன், அடர்ந்த கானகம் சென்று, கையற்றுக் கலங்கி, தரையிலமர்ந்து தன் முழங்கால்களில் தலையைக் கவிழ்ந்து இருந்தபோது, அவ்வழியே சென்ற 'ஜரஸ்' என்ற வேடன் ஒருவன், கண்ணனைக் காட்டு விலங்கெனத் தவறாகக் கருதி அம்பெய்தியமையால், குதியூடுபட்டுக் கண்ணன் மாய்ந்தான்.

அங்ஙனமே இராமனும் ஆற்றில் அடித்துச் செல்லப்பட்டு மாண்டு போனான். உழவுச் சாலினின்றும் தோன்றிய சீதை மீண்டும் தன்னைப் பிறப்பித்த நிலத்தின் கண்ணே வீழ்ந்துபட்டனள்.

இவர்களின் இறப்பினின்றும் இயேசுவின் இறப்பு மாறுபட்டது. அவர் யூத இனத்தவரால் சிலுவையில் கொல்லப்பட்டார். யூதரு

டைய ஆளுநரிடம் இயேசுவின் மீது குற்றம் சுமத்தி அவரைச் சிலுவையில் அறைய வேண்டும் என்று கூச்சலிட்டபோது, ஆளுநர் பல முறை இயேசுவை விசாரித்துவிட்டு, 'இயேசுவிடம் ஒரு குற்றத்தையும்தான் காணவில்லை' என்று மூன்று முறை (யோவான் 18:38, 19:4,6) உறுதிப்படுத்தினார். மரண தண்டனைக்குரிய ஒரு குற்றத்தையும் ஆளுநரால் கண்டுபிடிக்க முடியவில்லை. எனவே யூதர்களின் கூச்சலின் நிமித்தம் இயேசுவைச் சிலுவையில் அறையப் பிலாத்து ஒப்படைத்தார். அப்போது இயேசுவின் இரத்தப் பழி தம்மீது சுமராது என்று கூறி அவர்களின் கண்ணெதிரே தம் கைகளைக் கழுவினார் (மத்தேயு 27:24).

இயேசுவைப் பகைவரிடத்துக் காட்டிக் கொடுத்த யூதாசு, "குற்றமில்லாத இரத்ததைக் காட்டிக் கொடுத்ததினால் பாவஞ் செய்தேன்' (மத்தேயு 27:4) என்று மனம் வருந்தி நான்றுகொண்டு செத்தான். இவை போன்ற நிகழ்ச்சிகள், இயேசு குற்றமற்றவர் என்பதைப் புலப்படுத்துகின்றன.

இயேசு சிலுவையில் கொலையுண்டார் என்று உலகியல் நிலையில் சாதாரணமாகக் கூறினாலும், உண்மையில் அவர் கொலை செய்யப்படவில்லை. அவர் பலியாக்கப்பட்டார். இறையியல் நிலையில் இதுதான் சரியானதாகும். எபிரேயருக்கு எழுதின திருமுகத்தில்,

*"இயேசு கிறித்துவின் உடல் ஒரேதரம் பலியிடப் பட்டதனாலே...நாம் பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறோம்"*
*- எபிரேயர் 10:10*

*"இவரோ, பாவங்களுக்காக ஒரே பலியைச் செலுத்தி, என்றென்றைக்கும் தேவனுடைய வலப்பக்கத்தில் உட்கார்ந்தார்" - எபிரேயர் 10:12*

என்னும் திருமறைப் பகுதிகள், இயேசுவின் கொலையைப் 'பலி' என்று குறிப்பிடுகின்றன.

ஒருவர் செய்த குற்றங்களுக்கும் பாவங்களுக்கும் கழுவாயாக செலுத்தப்படுவதே பலி. பலி முறை வணக்கம், சமயங்கள் பல

வற்றில் காணப்படும் வழிபாட்டு முறையாகும். பழைய ஏற்பாட்டில் பல்வேறு விதமான பலி முறைகள் சுட்டப்படுகின்றன. இப்பலி முறை வணக்கம் இயேசு பலியான காலக்கட்டத்திற்குப் பிறகு, ஏறத்தாழ எல்லாச் சமயங்களிலுமே நிறுத்தப்பட்டு விட்டன என லாம். உலகப் பெருஞ்சமயங்களான கிறித்தவம், சைவம், வைண வம் முதலான அறுவகைச் சமயம் போன்றவற்றில் பலி முறை அறவே நிறுத்தப்பட்டன. சிறு தெய்வங்களை வழிபடும் கோயில்கள் சிலவற்றில் பலி முறையை இன்றும் காணலாம். ஆனால் பெருஞ் சமயங்களில் இல்லை.

இந்தியச் சமயங்களான சைவம், வைணவம், சாக்தம், கௌ மாரம், காணாபத்தியம், சௌரம் முதலிய கோயில்களில் நுழை வாயிலையடுத்து, மூலத்தானத்திற்குப் போகும் முன்னர் பலி பீடம் இருப்பதைக் காணலாம். ஆனால் அதில் பலி செலுத்தப்படு வதில்லை. இதற்கு இயேசுவின் பலிதான் காரணம் என்று இன்றைய ஆய்வுகள் புலப்படுத்துகின்றன.

இயேசு பலியான பிறகு உலகப் பெருஞ்சமயங்களில் பலி நிறுத்தப்பட்டுவிட்டது. ஏனெனில் உலக மக்கள் அனைவரின் பாவங்களுக்குக் கழுவாயாக, அவதாரமாக வந்த கடவுளின் மா உன்னதமான பலி செலுத்தப்பட்டு விட்டது. கடவுட்பலி, அவரு டைய பலியின் அடையாளமாயிருந்த உயிர்ப் பலிகள் அனைத்தை யும் நிறைவேற்றி விட்டது. எனவே, இனி பாவத்திற்குக் கழுவாயா கப் பலி செலுத்தத் தேவை இல்லை என்னும் புதிய இறையியல் கோட்பாடு உருவானது. இதுவே பலி நிறைவேற்றக் கோட்பாடு ஆகும்.

## பலி நிறைவேற்றமே அவதாரத்தின் நோக்கம்

பலி நிறைவேற்றத்திற்கும் அவதாரத்திற்கும் என்ன தொடர்பு? பலி செலுத்தப்படுவதற்கு உடலும் உயிரும் சேர்ந்த ஒன்று தேவை. சாதாரணமாக ஆடு, மாடு, புறா, கோழி போன்றவை உயிர்ப் பலியாகச் செலுத்தப்படுவது வழக்கம். பலிகள் தொடர்ச்சி யாகக் கொடுக்கப்பட்டு வந்தன. உண்ட ஒருவருக்குச் சில மணி நேரங்களிலேயே பசி ஏற்பட்டு விடுகிறது. மறுபடியும் உணவு உண்ண வேண்டும். நிரந்தரமாகப் பசியை நிறுத்த முடியாதது

போல, பலியையும் திரும்பத் திரும்பச் செலுத்த வேண்டும். எந்த ஒரு பலியும் மக்களின் பாவத்தை நிரந்தரமாகப் போக்கவில்லை. எனவேதான், மக்களின் பாவங்களுக்குக் கழுவாயாகக் கடவுளே இவ்வுலகில் மாந்தனாக அவதாரமெடுத்துத் தன்னையே பலிப் பொருளாக ஈந்து, உலக மாந்தர் அனைவரையும் மீட்டுக் கொண்டார்.

உலகத்தில் பாவமானது முதலாம் மனிதனின் கீழ்ப்படியாமை யால் நுழைந்தது. எனவே பாவத்தின் மூலம் வந்த சாவையும் வென்று மக்களினத்திற்கு நிறைவான நீடுவாழ்வை அளிக்கும் பொருட்டாகக் கடவுள் இவ்வுலகில் கீழ்ப்படிதலுள்ள மனிதராக அவதாரமெடுத்தார். அருவமாக இருந்த கடவுள், ஐம்புலன்களை யுடைய உடல் தாங்கி மனிதனாக வந்தார். தனது பலியின் மூலம் சாவை வென்று நீடுவாழ்வளித்திடவே கடவுள் அவதார மெடுத்தார்.

இந்த அடிப்படையைத் திருமூலர் தமது பாடலில் விளக்கு கிறார். 'விண்ணின் றிழிந்து வினைக்கு ஈடாய் மெய்கொண்டு' என்னும் அடியில், 'வினைக்கு ஈடாக மெய் (உடலை) கொண்டார்' எனக் குறிப்பிடுகிறார். முதல் மாந்தனின் பாவ வினையை ஈடு கட்டுவதற்காகக் கடவுள் அவதாரம் எடுத்ததாகக் கூறுகிறார். சைவ சித்தாந்த இலக்கியங்களில் இக்கருத்து மிக விரிவாகப் பேசப்படுகிறது. பகவத் கீதையிலும் பிற வேதாந்த இலக்கியங் களிலும் 'அஹம் யக்ஞ:' (கீதை 9:16), 'அகம் ஏவ அதியக்ஞ:' (கீதை 8:4) என்றெல்லாம் குறிக்கப்படுகிறது. இதற்கு, 'நானே பலி' என்று பொருள்.

கடவுளே பலியானார், வேறு பலிகளெல்லாம் நிறைவான பலிகளல்ல என்ற விளக்கம் இதில் பொதிந்துள்ளது. கடவுளின் பலி, அதாவது, அவதாரமாக வந்த கடவுள் பலியானது திருவிவிலி யத்தில்தான் விளக்கப்படுகிறது. உலக மக்கள் அனைவருக்கும் பாவத்திலிருந்து விடுதலையளித்திடக் கடவுள் அவதாரம் எடுத்தார். திரு.வி.க. இதனை, 'உலகெலாம் உய்ய வேண்டி உருக்கொடு மண்ணில் வந்தாய்' என்று இயேசு பெருமானை வாழ்த்திக் 'கிறித்துவின் அருள் வேட்டல்' என்னும் நூலில் பாடுகிறார்.

கடவுள் அவதாரமாக வந்து உலகோரின் பாவங்களுக்குக் கழுவாயாகப் பலியானார் என்று கிறித்தவத்தில் சொல்லப்படும் வரலாறு இந்தியச் சமயங்களில் தாக்கங்களை உருவாக்கி யுள்ளது. இவை பற்றிய ஆய்வுக் கருத்துகள் ஏராளமாக வெளிவந் துள்ளன. தொடர்புக்காக ஒரு சில கருத்துகள் கீழே தரப்படுகின்றன.

சைவ சமயத்தின் போற்றிப் பாடல்களில் தேவாரம் சிறப்பிடம் பெற்றுள்ளது. உலக மக்களின் பாவங்களைப் போக்குவற்குக் கடவுள் பலியானார் என்னும் செய்தி இதில் குறிக்கப்பட்டுள்ளது.

"அவியாய் அவியுமாகி
அருக்கமாய்ப் பெருக்கமாகிப்
பாவியார் பாவந் தீர்க்கும்
பரமனாய்ப் பிரமனாகி"
- அப்பர் தேவாரம், 320.

என்னும் அடிகளில் 'அவி' என்னும் சொல் பயன்படுத்தப்படு கிறது. அவி என்பதற்குப் பலி என்பது பொருள். பாவியரின் பாவத்தைத் தீர்ப்பதற்குப் பரமனாகிய பிரமன் (அவதாரக் கடவுள்) பலியானார் என்பது மேற்குறித்த பாடலடிகளின் கருத்தாகும்.

வைணவ சமயத்தினர் போற்றும் திராவிட வேதமாகிய நாலா யிர திவ்வியப் பிரபந்தத்தில் திருமழிசை ஆழ்வார்,

"வேதமாகி வேள்வியாகி விண்ணினோடு மண்ணுமாய் ஆதி யாகி ஆயனான மாயமென்ன மாயமே"

(நாலாயிரம், 1786) என்னும் அடிகளில் 'வேள்வி' என்பது பலியைக் குறிக்கும் சொல்லாகும்.

கடவுள் பலியான செய்தி வேதாந்தத்திலும் உபநிடதங்களி லும், பிரமசூத்திரத்திலும், பகவத் கீதையிலும் கூறப்படுகிறது. பகவத் கீதையில் குறிக்கப்படும் ஓரிரு இடங்களைக் கீழே குறிப்பிடலாம்.

'அகம் ஏவ அதியக்ஞம்:' (கீதை 8:4)
'அகம் யக்ஞம்' (கீதை 9:16)

'யக்ஞும்' என்னும் சமற்கிருதச் சொல்லுக்குப் பலி என்பது பொருளாகும். இவற்றை, 'நான் பலி', 'நானே பலி', 'நான் பலி யாயிருக்கிறேன்' என்றெல்லாம் தமிழ்ப்படுத்தலாம்.

வேதாந்தத்தில் 'அகம் யக்ஞும்' என்பதன் ஆழ்ந்த பொருளை ஆராய்ந்து பார்ப்பவர் அருகியே காணப்படுகின்றனர். 'நானே பலி' என்று கீதையில் அவதாரமாக வந்த கடவுளின் வார்த்தை களாகக் குறிக்கப்படுவது ஏன்?

வரலாற்றில் இயேசு பெருமானின் பலி நிறைவேற்றத்தை எதிரொலிப்பதாக மேலே குறித்த தொடர் அமைந்துள்ளது. பலி செலுத்தி வழிபட்டு வந்த வைதிகர்கள் இன்று பலி செலுத்துவது இல்லையே ஏன்? வேதாந்தத்தில் பலி செலுத்தி வணங்கிய முறை நிறுத்தப்பட்டு விட்டதே! பலியைப் புறந்தள்ளி, 'பிரம ஞானத்'தை வேதாந்தம் சிறப்பிக்கத் தொடங்கி விட்டதே! ஏன்?

பழைய ஏற்பாட்டுக் காலத்தில் செலுத்தப்பட்டு வந்த பலி முறை வணக்கம் புதிய ஏற்பாட்டில் நிறுத்தப்பட்டு விட்டதே! ஏன்? இதற்கு ஒரே பதில் - இயேசு கிறித்து பலியாகி விட்டதால், வேறு பலிகள் தேவையற்றவையாகி விட்டன — என்பதாகும். கிறித்தவம் பலி நிறைவேற்றத்தை அடிப்படைக் கோட்பாடாகக் கொண்ட சமயமாகும். எனவே, அவதாரக் கடவுளின் பலி நிறை வேற்றம் கிறித்துவுக்குப் பின்னர் உருவான சைவம், வைணவம் முதலான அறுவகைச் சமயத்திலும், இந்திய மெய்ந்நூலியலான வேதாந்தத்திலும் வேர் கொண்டு நிலைபெறத் தொடங்கி விட்டது என்பதே வரலாற்றில் சரியான விளக்கமாக அமைகிறதெனலாம். எனவே, பலி நிறைவேற்றமே அவதாரத்தின் நோக்கம். பலி நிறைவேற்றத்திற்கு உலக மீட்பு அடிப்படை நோக்கம். முதலாம் மாந்தனின் கீழ்ப்படியாமையாகிய பாவம், அதனால் வந்த சாவு...! எனவே ஆதாமின் வழிவந்த சந்ததியார் அனைவரையும் பற்றிக் கொண்ட பாவத்திலிருந்தும் சாவிலிருந்தும் உலக மக்கள் அனைவரையும் மீட்டு அவர்களுக்கு நீடு வாழ்வை அருள வேண்டும் என்னும் கடவுளின் அளவிட முடியாத அன்பு, அவரின் மைந்தனாகிய இயேசு பெருமானை உலகிற்குப் பலிப் பொருளாக அனுப்பி, அவரின் உன்னதமான பலியின் மூலம் உலகை மீட்டுக் கொண்டார். இதுவே அவதாரத்தின் உன்னதமான நோக்கம் ஆகும்.

## அவதாரம் ஒன்றா? பலவா?

கடவுள் அவதாரமாகப் பிறந்து வந்தது ஒருமுறையா? பல முறையா? என்னும் கேள்வியை எழுப்பினால் ஒரே விதமான பதில் அதற்குக் கிடைக்கும் என்று எதிர் பார்ப்பது கடினம்.

இந்தியத் தொன்மங்களில் மேற்குறித்த கேள்விக்கு ஒரே பதில் இல்லை! விஷ்ணுதான் அவதாரங்களை எடுக்கும் மூலக் கடவுள் என்பது ஒரு சாராரின் கோட்பாடு. சிவனுக்குக் கன்மம் இல்லை. அதனால் அவனுக்கும் அவதாரத்திற்கும் தொடர்பில்லை என்பது வேறு ஒரு சாராரின் கோட்பாடு. கடவுள் மறுப்பாளராகிய சங்கரர் சிவனின் அவதாரமாக வந்தார் என்பது ஒரு சாராரின் கோட்பாடு. அவ்வாறே கிறித்துவுக்கு முற்பட்ட காலத்தில் தோன்றி, பௌத்த சமயக் கருத்துகளை ஒருமுகப்படுத்திய புத்தரையே விஷ்ணுவின் அவதாரமாக மாற்றி விட்டனர்! தமிழக முன்னாள் முதல்வர் எம்.ஜி. இராமச்சந்திரனை இராமனின் அவதாரமாக ஏற்றுக் கொண்ட ஒரு சாரார்! நம் நாட்டு நடிகர் பலரைக் கடவுளராகவும் அவதார மாந்தராகவும் மாற்றிய, மாற்றிக் கொண்டு வரும் நிகழ்ச்சிகள் ஏராளம்! ஏராளம்!!

மகாபாரதத்தில் நாராயணியா என்னும் பகுதியில் பத்து அவதாரங்கள் குறிக்கப்படுகின்றன. வாயு புராணம் 98:17 இல் பத்து அவதாரங்கள் குறிக்கப்படுகின்றன. பாகவத புராணத்தில் அவதாரங்களின் எண்ணிக்கை மும்முறை பட்டியலிடப்படுகின்றன. முதன் முறை 22 அவதாரங்கள்; இரண்டாம் முறை 23 அவதாரங்கள்; மூன்றாம் முறை 16 அவதாரங்கள். சாத்வத சம்கிதை 39 அவதாரங்களைக் குறிப்பிடுகின்றது. அரிவம்சம் எட்டு அவதாரங்களைச் சுட்டுகின்றது. அவதாரங்கள் பத்து என்று குறிப்பிடும் நூல்களில் அவதாரங்களின் பெயர்கள் மாறுபடுகின்றன. அதாவது, ஒன்றில் குறிக்கப்பட்டது மற்றொன்றில் இல்லை. என்றாலும் பொதுவாகப் பத்து அவதாரங்கள் 'தசாவதாரங்கள்' எனக் குறிக்கப் படுகின்றன.

பௌத்த மதத்தை இந்திய மண்ணிலிருந்து அகற்றுவதற்காகப் புத்தரை விஷ்ணுவின் அவதாரமாக இணைத்து வெற்றி கண்டதைப் போல, கிறித்தவ மதத்தை அகற்றுவதற்காக, இயேசு கிறித்துவை

யும் விஷ்ணுவின் அவதாரமாக மாற்றுவதற்கு முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டன. ஆனால் அம்முயற்சிகள் வெற்றி பெறவில்லை!

இப்பின்னணியில் அவதாரக் கோட்பாட்டைச் சீர்தூக்கிப் பார்க் கும் போது, அவதாரம் என்பது ஒன்றா? பலவா? என எப்படி முடிவு செய்ய முடியும்? அவதாரங்களின் எண்ணிக்கையும் பெயர் கள் புராணத்திற்கு புராணம் அல்லது நூலுக்கு நூல் மாறுபடுவதற் குக் காரணம் என்ன? அவதார மாந்தரைத் தொடர்புபடுத்திக் கொச்சையான சில கதைகளும் புனைந்துரைக்கப்படுகின்றனவே, ஏன்? கற்றறிந்த உணர்வுடைய நடுநிலையாளர் ஒவ்வொருவரும் இவற்றைக் காய்தல் உவத்தல் அகற்றி ஆய்தல் அறிவுடைமையா கும். அப்போதுதான் கட்டுக் கதைகட்கும் வரலாற்றுக்கும் வேறுபாடு தெரியும்.

இன்னொரு கருத்தையும் இதனோடு தொடர்புறுத்திப் பார்க்க வேண்டும்.'மறுமுறை வருதல்' என்னும் திரும்பத் திரும்ப எடுக்கும் அவதாரம் (Repeated Avatar) என்னும் கருத்து முறையும் நம் இந்தியச் சிந்தனையில் காணப்படுகிறது. பௌத்தம், சமணம், ஆசீவகம் முதலிய மதங்களிலும் இச்சிந்தனை உள்ளது.

'நல்லவர்களை பாதுகாப்பதற்கும் தீயோரை அழிப்பதற்கும் யுகந்தோறும் நான் வெளிப்படுகிறேன்' என்று கீதையில் கண்ணன் உரைக்கிறார். 'நான் யுகந்தோறும் அவதரிக்கிறேன்' என்று குறிப் பிடாமல் 'சம்பவாமி யுகே யுகே' என்று குறிக்கப்படுகிறது. அதனை 'யுகந்தோறும் அவதரிக்கிறேன்' என மொழிப்படுத்தினாலும் 'யுகந்தோறும் பிறக்கிறேன்' எனப் பொருள்படுத்தத் தேவையில்லை. 'அவதாரம்' என்பது ஒரு முறை நிகழ்வது. ஆனால் அவதாரமாக வந்த கடவுள் மறுமுறை வெளிப்படுவது என்பது மறு அவதார மன்று; திரும்பத் திரும்ப எடுக்கும் அவதாரமன்று.

கல்கி அவதாரம் இறுதி அவதாரமாகப் பலரால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. இயேசு பெருமானின் இரண்டாம் வருகையை யும் கல்கி அவதாரத்தையும் இணைத்து அறிஞர் பலர் கண்டுள்ள னர். இயேசு கிறித்து முதல் முறை பெத்தலகேம் என்னும் ஊரில் குழந்தையாகப் பிறந்தார். சிலுவையில் பலியாகி உயிர்த்தெழுந்து மீண்டும் விண்ணுலகிற்கு ஏறிச் சென்றார். அவர் இவ்வுலக

இறுதியில் நீதியரசராக வரப் போகிறார் எனக் கிறித்தவ உலகம் எதிர் நோக்கிக் காத்திருக்கிறது. ஆனால், அதற்கு முன்னால் 'இரகசிய வருகை' என்ற ஒன்று இயேசுவுக்குச் சொல்லப்படுகிறது. ஆயிரம் ஆண்டுகள் அவரது அரசாட்சி உள்ளது என இறையியல் வல்லுநர் பறை சாற்றி வருகின்றனர். அப்படியானால், இயேசுவின் பிறப்பு, மறுபடி உயிர் பெற்றெழுந்தது, இரகசிய வருகை, இரண் டாம் வருகை – என்று பல வெளிப்படுதல்கள் திருமறையில் குறிப்பிடப்படுகின்றனவே!

இயேசுவின் அவதாரம் ஒரே ஒரு முறைதான் நிகழ்ந்தது. ஆனால் அவதாரமாக வந்த அவர் வெவ்வெறு காலக் கட்டங்களில் வெளிப்படுகிறார் என்பதுதானே பொருள்? 'புராணங்கள்' எனப்படும் தொன்மங்கள் விளக்கும் நிகழ்வுகள் மிகைபடக் கூறல் அல்லது புனைந்துரை வகையாகும். இது உலகியல் வழக்கிற்கும் நாடக வழக்கிற்கும் உள்ள வேறுபாட்டைப் போன்றது. புனைந்துரை ஒருபோதும் வரலாறு ஆகாது. எனவே, தொன்மங்களில் குறிக்கப்படும் அவதாரக்கதைகளும் அதைப் போன்றதே என்க.

இந்தியாவில் அவதாரக் கோட்பாடு கிறித்துவின் காலத்திற்கு முன்னர்த் தோன்றவில்லை. இருக்கு, யசூர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களிலும் அவதாரம் பற்றிய சிந்தனைக் கூறுகள் இல்லை. வரலாற்றடிப்படையில் பார்க்கும் போது, கிறித்த வமே அவதாரக் கருத்து முறையை வழங்கியுள்ளது. இதன் தாக்கத்தால் உந்தப்பட்ட இந்தியத் தொன்மங்கள், இந்த அவதாரக் கோட்பாட்டை விளக்குவதற்கு ஏராளமான புனை கதைகளையும் தொன்மங்களையும் உருவாக்கிய நிலையில் அவற்றில் பகுத்தறி வுக்கு ஒவ்வாத கதைகள் பலவற்றையும் காலங்காலமாக இணைத் துப் பெருகச் செய்துவிட்டனர் என்பது மிகத்தெளிவாகப் புலனா கிறது.

உண்மை அவதாரம் எது? அதாவது, உண்மையில் அவதார மாக வந்த கடவுள் யார் என்பது மேற்குறித்தவற்றால் செம்மையுற விளங்கும் அல்லவா? இயேசுவே அவதாரம்! அவதாரமாக வந்த கடவுள்!! ■

## தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனம்

இது அரசாங்கத்தால் பதிவுசெய்யப்பட்டதொரு அறக் கட்டளை. இந்தியாவைக் கிறித்துவுக்குள்கொணர வேண்டும் என்னும் நோக்குடன் உழிய வாஞ்சையுடைய நண்பர் சிலரால் அமைக்கப்பட்டதொரு நிறுவனம் ஆகும்.

**இதன் நோக்கம்**

கிறித்தவக் குருமார், நற்செய்தியாளர், இறை தூதர், திருச் சபை உறுப்பினர் போன்றோருக்குப் பயிற்சி அளித்து இயேசு பெருமானின் இறுதிக்கட்டளையை நிறைவேற்றுவது.

திருவிவிலியம், இந்திய வேதங்கள், வேதாந்தம், தமிழ்ப் பக்தி இலக்கியங்கள் முதலிய ஆய்வுத் திட்டங்களில் பங்கேற் பதுடன் அவற்றை ஒழுங்கு செய்து, இந்தியவியல் சார்ந்த கல்வியின் வாயிலாக மறைந்துள்ள கிறித்துவை வெளிக் கொணர்ந்து இந்தியப் பண்பாடு, கோட்பாடுகள் முதலியவற் றின் அடிப்படையில் நற்செய்தியை அறிவிப்பது.

**பயிற்சித் திட்டங்கள்**

ஆண்டொன்றில் மூன்று பருவங்களாகக் கருத்தரங்கு வகுப்புகளைத் தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனம் ஒழுங்கு செய்கிறது. மூன்று நாட்களடங்கியது ஒரு பருவ மாகும். ஓராண்டில் 35 முதல் 40 பேரைத் தேர்வு செய்து மூன்று பருவக் கருத்தரங்கு வகுப்புகளை நடத்தி ஏறத்தாழ 35 தலைப்புகளில் அவர்கள் பயிற்சி பெறும் வகையில் பாடத் திட்டம் வகுக்கப்படுகிறது. இதுவரை 17 குழுக்கள் தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனத்தின் வாயிலாகப் பயிற்சி பெற்றுச் சென்றுள்ளன. ஆண்டுதோறும் நடைபெறும் பயிற்சி வகுப்புகள் தவிர இத்தகு பயிற்சி பெற விரும்பும் திருச்சபை கட்கும் நிறுவனங்களுக்கும் இந்நிறுவனம் பயிலரங்குகளை ஒழுங்கு செய்கிறது. இந்நிறுவனத்தில் பயிற்சிபெறும் ஆசிரியர் கட்கும் ஆசிரிய மேம்பாட்டுப் பயிற்சி வகுப்புகளையும் இந் நிறுவனம் குறிப்பிட்ட காலங்களில் நடத்துகிறது.

# அவதாரமும் கிறித்தவமும்

வரலாற்று நிகழ்வில் அவதாரம் என்பது ஒரே ஒரு முறைதான் நிகழ்ந் தது. இதனை விளக்குதற்கு எழுந்த புராணங்கள் கதைகளாகவும் புனைந் துரைகளாகவும் திகழ்கின்றன. உண்மை அவதாரத்தின் வரையறுக்கப் பட்ட இலக்கணங்களை இந்நூல் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கிறது. 'அவதார்' என்னும் வடசொல்லுக்குக் 'கீழே இறங்கி வருதல்' என்பது பொருள். விண்ணுலகிலிருந்து மனிதனாக இறங்கி வரும் கடவுளைக் குறிப்பதுதான் அவதாரம். மண்ணுலகிலுள்ள மனிதர்களைக் கடவுள் நிலைக்கு உயர்த்திக் காட்டுவது அவதாரமாகாது. கிறித்து மனிதனாக இவ்வுலகில் பிறந்து வாழ்ந்தாலும் அவரிடம் கடவுட் பண்பும் மனிதப் பண் பும் நிறைவாகவே இருந்தன என்பதை இச்சிறுநூல் விளக்குகிறது.



**பேராசிரியர் யா. தா. பாசுகரதாசு** பாளையாங்கோட்டை தூய யோவான் கல்லூரியில் பயின்று, சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆய்வியல் நிறைஞர், முனைவர்ப் பட்டங்கள் பெற்றவர். தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனத்தின் துணைத்தலைவராகவும் பாடத்திட்ட இயக்குநராகவும் திகழும் இவர், மலேசியா, பிரிட்டன், அமெரிக்கா முதலிய நாடு களில் கருத்தரங்கங்கள் நடத்தி உரைகள் பல நிகழ்த்தியுள் ளார். சமய மெய்ந்நூல் ஒப்பாய்வு தொடர்பாகத் தமிழிலும் ஆங்கிலத்திலும் ஏராளமான ஆய்வுக்கட்டுரைகளும், பத்து நூல்களும் எழுதியுள்ளார்.

MAXIMUM RETAIL PRICE INCLUSIVE OF ALL TAXES
₹30/-



தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனம்
508, 22 –ஆம் தெரு, பெரியார் நகர், கொரட்டூர், சென்னை – 600 080.